THE HON. SRI R. VENKATARAMAN : Sir, the Governmennt decided in 1957 to take over the Kanyakumari-Nagercoil route. Then according to the decision of the Cabinet, three years' notice was given but meanwhile we have introduced long distance routes—Madras to Bangalore and Madras to Tiruchirappalli, etc. We find that long distance routes are more profitable and more popular and there is greater demand from people to go in for these long-distance routes. Therefore, the Government have decided to go in for long-distance routes and not take up small routes.

SRI M. KALYANASUNDARAM : *ஏற்கெனவே சர்க்கார் பஸ் போக்குவரத்து நடந்துக்கொண்டிருக்கிற அந்தப் பகுதியில், பல மார்க்கங்களில் போய்க்கொண்டிருக்கிற காரணத்தினால், இந்த ஒரு மார்க்கத்தில் மாத்திரம் தனியார் ஒருவருக்கு 'மானோபலி'- யாக விடுவது ஆபத்தல்லவா? அந்த அளவிற்கு சர்க்கார் போக்கு வரத்து அந்தப் பகுதியில் தடைப்பட்டுவிடாதா?*

THE HON. SRI R. VENKATARAMAN : *கன்னியாகுமரி பகுதியிலும் நெடுந்தூர பஸ்களை தேசிய மயமாக்குவதற்கு பரிசிலனை செய்தோம். இரண்டையும் ஒரே சமயத்தில் எடுத்துக் கொள்வதற்கு போதிய நிதியும், வசதியும் இல்லை.*

SRI K. PERIANNAN : *கனம் தலைவர் அவர்களே, இந்த சர்க்காரால் நடத்தப்படுகிற நீண்டதூர பஸ்லே பிரயாணம் செய்கிறவர்களுக்கு வசதி குறைவாக இருக்கிறதென்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா?*

THE HON. SRI R. VENKATARAMAN : *கனம் அங்கத்தினர் அவர்கள் இன்னும் சர்க்கார் நெடுந்தூர பஸ்லே பிரயாணம் செய்யவில்லை போலும். அதில் பிரயாணம் செய்துவிட்டு என்னிடம் வந்து சொல்லும்படியாகக் கேட்டுக் கொள்ளுகிறேன். பல சட்டசபை அங்கத்தினர்களே இதில் பிரயாணம் செய்துவிட்டு இவைகள் நன்றாக இருக்கின்றன வசதியாக இருக்கின்றன, பல இடங்களில் விஸ்தரிக்கவேண்டுமென்றும் சொல்லுகிறார்கள்.*

*Bigamy*

* 724 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state the number of Government servants who were dismissed from service for bigamy in 1958–59 and 1959–60?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Public interest served by answering the question would not be commensurate with the time and labour involved in collecting the particulars for the answer.

SRI A. A. RASHEED : May I know the number of Government servants who obtained permission from the Government for taking second wife?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I do not have information about it.

[10th March 1961]

SRI J. MATHA GOWDER: சட்டசபை உறுப்பினர்களிலே இருதார மணம் செய்துக்கொண்டவர்கள் யாராவது இருகிறார்களா? அப்படி இருந்தால் அவர்களை சட்டசபை உறுப்பினர் பதவியிலிருந்து நீக்குவதற்கு அரசாங்கம் முன் வருமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அதைப்பற்றி என்னிடத்தில் தகவல் இல்லை.

*Medical Education*

* 725 Q.—SRI K. SATTANATHA KARAYALAR: Will the Hon. the Minister for Revenue be pleased to place on the Table of the House the recommendations of the Committees which were appointed to advise the Government on the patterns of schemes for medical education and training, and for the re-organization of the Public Health Laboratories and the King Institute, Guindy?

THE HON. SRI M. A. MANICKAVELU: The report of the Expert Committee on Medical Education and Training Programmes is under consideration of the Government. The report of the Expert Committee on the re-organisation of the Public Health Laboratories and the King Institute, Guindy, is awaited.

*Artificial rain*

* 726 Q.—SRI A. VEDARATHNAM: கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நம் மாநிலத்திலுள்ள பெருவாரியான வரண்ட பிரதேசங்களில் ஒலி அலைகளைக்கொண்டு செயற்கை மழை உற்பத்தி செய்ய உத்தேசமுண்டா?

(இ) அதிக மழை பெய்வதை செயற்கை முறை மூலம் கட்டுப்படுத்த மார்க்கம் உண்டா? அதன் விவரம் என்ன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (a) No, Sir. Only seeding the clouds for producing artificial rain-making is being experimented. This too is under initial stages of trial.

(b) Not known. Nobody seems to have taken up any study in the matter.

SRI A. VEDARATHNAM: இந்த செயற்கை மழை விஷயத்தில் மற்றவர்கள் ஆராய்ச்சி செய்து பரீட்சை செய்து பார்ப்பதைவிட நாமே சொந்தமாக ஆராய்ச்சியில் ஈடுபட்டு, நம்முடைய திறமையை வெளிப்படுத்துவதற்கும், பொருள் அதிகமாக வீணாகாமல் இருப்பதற்கும் வழியாக இருக்குமே. ஆகவே அரசாங்கம் இந்தத் துறையிலே முயற்சி செய்வதற்கு முன்வருமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: நாமே பரிசீலனை செய்து வந்திருக்கிறோம். குறைந்த செலவில்தான் இந்த பரீட்சையை நடத்தி வருகிறோம். அதோடு அன்னிய நாடுகளில் நடத்தப்படும் பரீட்சையை எடுத்துக்கொண்டால் எனக்குத் தெரிந்தவரை அங்கேயும் முடிவு பெற்றதாகத் தெரியவில்லை.